# அருள்மிகு
# மணக்குள விநாயகர்
# தல வரலாறு



அருள்மிகு மணக்குள விநாயகர்,
புதுச்சேரி.

# ARULMIGU MANAKULA VINAYAGAR DEVASTHANAM

PUDUCHERRY - 605 001. Ph : 0413 2336544
website : www.manakulavinayagartemple.com
Email : office@www.manakulavinayagartemple.com

## Abishegam Timings

Evertday 6.30 a.m & 11.00 am
Monday to Thursday 6.30 a.m. & 11.00 a.m.
(Except Festival Days)

| Name of Seva |
|---|
| Archanai Ticket |
| Special Entrance (Per Head) |
| Saharsra Nama Archanai |
| Moolavar Abishegam |
| Sandhana Kaappu |
| Silvar Chariot Urchavar |
| Moolavar - American Diamond |
| Golden Chariot Urchavar |
| Moolavar - Navarathna Kavasam |
| Ganapathy Homan |
| Gaja Poojai |
| Vennai Kaappu |
| Thiru Kalyana Urchavam Urchavar |
| Moolavar - Thanga Kavasam |
| 108 Sangabishegam |
| 1008 Sangabishegam |
| Annathanam Seva |

Donations are exempted under 80G of the Income Tax Act

உ

ஸ்ரீ மணக்குள விநாயகர் துணை

# அருள்மிகு மணக்குள விநாயகரின் தல வரலாறும் - மகிமையும்



## அருள்மிகு மணக்குள விநாயகர் தேவஸ்தானம்

(புதுச்சேரி அரசு இந்து சமய அறநிலையத்துறையை சார்ந்தது)

மணக்குள விநாயகர் கோவில் வீதி, புதுச்சேரி - 605 001.

தொலைபேசி எண்: 0413 - 2336544

இணையதள முகவரி - website : www.manakulavinayagartemple.com

மின்னஞ்சல் முகவரி - Email : office@www.manakulavinayagartemple.com

*First Edition 2012*

**PRESIDENT**
**Arulmigu Manakula Vinayagar Devasthanam**
Manakula Vinayagar Koil Street, Puducherry.
Ph : 0413 - 2336544
website : www.manakulavinayagartemple.com
Email : office@www.manakulavinayagartemple.com

Price : ₹ 150/-

*Printed at*
**Pinnacle Computer Offset**
Sakth Towers, No.21, Villianur Road, Natesan Nagar,
Pondicherry - 5. Ph : 0413 2200188, 4508118
Email : pinnacleoffset@yahoo.com
website : www.pinnacleoffset.com

# முகவுரை

அருள்மிகு மணக்குள விநாயகர் தேவஸ்தானத்தின் தல வரலாறு குறித்தும் மற்றும் கோயிலின் அன்றாட நிகழ்வுகள் குறித்தும் இன்ன பிற செய்திகளுடன் வெளிவரவிருக்கும் இந்நூலுக்கு முகவுரை எழுதுவதில் பெருமகிழ்ச்சி கொள்கிறேன.

நமது இந்திய தேசத்தில் ஆன்மீக நெறிக்கு வித்திட்ட வகையில் இப்புதுச்சேரி மாநிலத்திற்கென ஒரு தனி இடமுண்டு. இப்புதுச்சேரி மாநிலத்தில் பல மகான்கள், சித்தர்கள் வாழ்ந்த வரலாறு நாம் அறிந்த ஒன்று. இத்திருத்தலத்தில் மகான் "தொள்ளைக்காதுச் சித்தர்" இருந்ததற்கான சான்றுகள் உண்டு. அவரால் துதிக்கப்பட்ட இவ்விநாயகப் பெருமானின் மகிமையும் பலரால் உணரப்பட்டு சொன்னதை நாம் அறிய முடிகின்றது.

முன்னாளில் மணற்குளத்துக்கருகில் அமர்ந்த விநாயகப் பெருமான், இந்நாளிலும் ஸ்ரீ மணக்குள விநாயகர் என்றே அழைக்கப்படுகின்றார். இத்திருக்கோயில் புதுச்சேரி மாநிலத்தின் முதன்மையாக சுற்றுலாத் திருத்தலமாகவும், அனைத்து மதத்தினரும் வந்து வழிபட்டுத் துதிக்கின்ற திருத்தலமாகவும் திகழ்கின்றது.

"வாழ்க புதுவை மணக்குளத்து வள்ளல் பாத மணிமலரே...." என்று தொடங்கி "பொன்னால் உனக்கொரு கோயில் புனைவேன்" என்று பாடிய மகாகவி பாரதியாரின் கனவானது இன்றைய தினம் புதுச்சேரி மாநிலத்தில் அமைந்துள்ள அருள்மிகு மணக்குள விநயகர் திருக்கோயிலில் மெய்ப்பிக்கப்பட்டுவிட்டது. மூலவர் உறையும் கருவறைக்கு மேலாக பொன் கோபுரம், மூலவர் மற்றும் உற்சவ மூர்த்திகளுக்கு பொன்னால் செய்யப்பட்ட கவசங்கள் ஆகியவை இதற்குச் சான்றாகும்.

இத்திருக்கோயில் பற்றிய எண்ணற்ற தலவரலாற்று செய்திகள் சான்றாவணங்களுடனும் புகைப்படங்களுடனும் இப்புத்தகத்தில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலும் இவ்வரலாற்றுச் செய்திகளையும் இத்திருக்கோயில் பற்றிய செய்திகளையும் தமிழ் மொழியில் மட்டுமல்லாது ஆங்கிலம், ஹிந்தி மற்றும் பிரெஞ்சு மொழிகளில் வெளியிடுவதில் இத்தேவஸ்தான அறங்காவல் குழுவின் தலைவர் என்கிற முறையில் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

இத்தேவஸ்தானத்தின் மூலம் முதன்முறையாக நான்கு மொழிகளிலும் அறிந்து கொள்ளும் வகையில் வெளியிடப்படும் இத்திருக்கோயில் தலவரலாற்று நூல், வெளிவருவதற்கான அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்ட அனைத்து அன்பர்களுக்கும் அறங்காவல் குழுவினர் சார்பில் எனது நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்வதோடு, அவர்கள் தங்கள் குடும்பத்தாருடன் எல்லாம் வல்ல பிரணவமூர்த்தி ஸ்ரீ மணக்குள விநாயரின் பேரருளைப் பெற்றுய்யுமாறு மனமாற வாழ்த்துகின்றேன்.

அன்புடன்

*வே. இராமச்சந்திரன்*, தலைவர்

# அருள்மிகு
# மணக்குள விநாயகரின்
# தல வரலாறும் - மகிமையும்

உ

புதுச்சேரி மணக்குள விநாயகர் துணை

'பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான் தருவேன் - கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றுந் தா'

- ஔவையார்

'வாக்குண்டாம்; நல்ல மணமுண்டாம்; மாமலராள்
நோக்குண்டாம்; மேனி நுடங்காது - பூக் கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு'

- ஔவையார்

வாழ்க புதுவை மணக்குளத்து
வள்ளல் பாத மணிமலரே!
ஆழ்க உள்ளம் சலனமிலாது!
கண்ட வெளிக்கண் அன்பினையே
சூழ்க! துயர்கள் தொலைந்திடுக!
தொலையா இன்பம் விளைந்திடுக!
வீழ்க கலியின் வலியெல்லாம்!
கிருத யுகந்தான் மேவுகவே.

- பாரதியார்

இந்தியத் துணைக்கண்டத்தில் ஆன்மீக வளர்ச்சியில் மறக்கவோ மறைக்கவோ முடியாத இடத்தைப் பெற்றிருப்பது **புதுவை நகரம்**. இப்புதுவை நகர்க்குப் புகழ் சேர்க்கும் பல இடங்களில் முதன்மையாக இருப்பது **அருள்மிகு மணக்குள விநாயகர் திருக்கோயில்.** இக்கோயில் வரலாறு புதுவை நகர் வரலாற்றோடு பின்னிக் கிடக்கின்றது. புதுவையில் பெயர் பெற்ற ஆலயங்களுள் ஸ்ரீ மணற்குள விநாயகர் ஆலயம் பழமையும் பெருமையும் உடையது. இது சரித்திரச்சான்றும் பெற்ற சுற்றுலாத் தலமாகவும், ஆன்மீகத் தலமாகவும் விளங்குகின்றது.

இவ்வாலயம் இப்பொழுது மணற்குள விநாயகர் தெரு என்ற தெருவிலே இருக்கிறது. இதற்குப் பின்புறத்தில் புதுவை நகரை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கும் நெடிய வாய்க்கால் அமைந்திருக்கிறது. கோயிலுக்குத் தெற்கே துய்ப்ளேக்ஸ் வீதி என்று முன்னர் வழங்கி வந்த இன்றைய ஜவஹர்லால் நேரு வீதியும், வடக்கே அம்பலத்தாடையர் மடத்து வீதியும் இருக்கின்றன. கோயிலின் வட பகுதியில் புதியதொரு மன்றமும் நந்தவனமும், மேற்குப் பகுதியில் கோவிலுக்குச் சொந்தமான குடியிருப்பு மனைகளும் இருக்கின்றன.

**பெயர்க் காரணம் :**

மணற்குள விநாயகர் என்ற பெயருக்கு ஒரு காரணம் சொல்லப்படுகின்றது. இக்கோயில் இருக்கும் இடத்திற்கு அருகில் மேற்குப் பகுதியில் ஒரு குளம் இருந்தது. அக்குளம் மணற்குளமாகத் திகழ்ந்தது. அக்குளக்கரையில் விநாயகரை வைத்து வழிபட்டு வந்தனர். எனவேதான் அவ்விநாயகர் **மணற்குள விநாயகர்** என்ற பெயரைப் பெற்றார்.

இக்கோயில் மிகப் பழமையானது என்பதற்குச் சான்றுகள் பல உள்ளன. கி.பி.15ஆம் நூற்றாண்டுக்கு முன்னரே இது கட்டப்பட்டிருக்க வேண்டும். வரலாற்று ஆசிரியர்கள் புதுவையின் தொன்மையைப் பற்றி எழுதுங்கால் சில கோயில்களைக் குறிப்பிட்டு உள்ளார்கள். அவற்றுள் ஒன்று கடற்கரைக்கு அண்மையில் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. இக்காலத்தில் புதுவையில் இருக்கின்ற கோயில்களில் கடற்கரைக்கு அண்மையதாய், சிறப்பு வாய்ந்ததாய் இருப்பது இம்மணக்குள விநாயகர் ஆலயமேயாகும். புதுவையரசு வெளியிட்டுள்ள **ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பில்** இக்கோயிலைப் பற்றிய குறிப்பு உள்ளது. 250 ஆண்டுகளுக்கு முன்பாக எழுதப்பட்டது ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு.

இங்குக் கோயில் கொண்டுள்ள விநாயகருக்கு மணற்குள விநாயகர் என்ற பெயர் பண்டுதொட்டே பகரப்பட்டு வருகிறது. நாளடைவில் மணற்குள விநாயகர் என்பது மணக்குள விநாயகர் என்று மருவி வழங்கப்படுகின்றது.

(புதுவை, பிள்ளைத் தோட்டத்தில் தங்கியிருந்து) இங்கு வந்து மணற்குள விநாயகரை அன்றாடம் வணங்கிப் பல தொண்டுகள் செய்து வந்த தொள்ளைக்காது சுவாமிகள் இயற்கை எய்தினார். அவரைக் கோயில் வளாகத்திலேயே அடக்கம் செய்து விட்டனர்.

கோயில் மேலும் மேலும் வளர்ச்சியுற்று சிறந்த நிலையில் திகழ்வதற்குரிய காரணங்களில் இதுவும் ஒன்றாகும்.

பழனியில் போகர் சமாதி, வைத்தீஸ்வரன் கோயிலில் தன்வந்திரி சமாதி என்பன போல இன்னும் பல கோயில்களில் தவசீலர் பலரை அடக்கம் செய்துள்ளமையை மக்கள் அறிவர்.

**செவிவழிச் செய்தி:**

புதுவையை ஆட்சி செய்த பரங்கியர்கள் காலத்தில் மணற்குள விநாயகர் விக்ரகம் பலமுறை கடலில் போடப்பட்டதாகவும், பின்னர் ஒவ்வொரு முறையும் அந்தத் திருவுருவம் பழைய இடத்திலேயே இருந்ததாகவும், இவ்வாறு பலமுறை நிகழ்ந்ததாகவும் கூறுவது மக்கள் இன்று வரையில் கூறிவரும் செவிவழிச் செய்தியாகும்.

ருத்ரோத்காரி வருடம் ஐப்பசி மாதம் 16ஆம் தேதி 1923ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் ஓர் இதழ் வெளிவந்து கொண்டிருந்தது. புதுவையையடுத்த புதுப்பாளையத்தில் இருந்த மகா வித்துவான் **பு.அ. பெரியசாமிப்பிள்ளை** அவர்களின் மாணவர்களில் ஒருவராகிய ஒர்லெயான்பேட்டை **நா. வெங்கடாசல நாயகர்** அவர்களால் பல ஆண்டு நடத்தப் பெற்றுவந்த **அச்சுகாபிவிருத்தினி** என்ற அந்தப் பத்திரிகையில் (பக்கம் 6, இலக்கம் 20) புதுவை ஸ்ரீ மணற்குள விநாயகர் ஆலயத்தைப் பற்றிய குறிப்புகள் எழுதப்பெற்றுள்ளன. அவை வருமாறு:

**திருக்கோவில் அமைவிடம்**

அக்காலத்தில் புதுச்சேரி மிகப்பெரிய நகரமாக விளங்காவிடினும், செம்மையான, நாகரிகம் செழித்த, செல்வர்கள் கொழித்த அழகான ஒரு பேரூராக விளங்கியுள்ளது. இன்றைய மணக்குள விநாயகர் கோவில் தெரு என்று அழைக்கப்படும் தெருவானது, அக்காலத்தில் (பிரஞ்சுக்காரர்

வருகைக்கு முன்னர்) நெசவாளர் தெரு (Rue de Tisserands) என விளங்கியுள்ளது.

தெருவின் இரண்டு பக்கங்களிலும் நிழல்தரும் மரங்கள்; மர நிழலில் காலை மலர்வதற்கு முன்னரே கைத்தறிப் பாவு நீட்டுதல் (அல்லு பிடித்தல்) என்ற தொழில் நடைபெறும்; இங்கு நெய்யப்பட்ட துணிகள் பல மேலைநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. அவற்றில் முரட்டுத் துணி வகைகளும் உண்டு; மிகமிக மெல்லிய (மஸ்லீன்) துணிவகைகளும் உண்டு.

ஊர்ப்பொதுமக்கள் அந்நாட்களில் விடியலில் எழுந்து, குளங்கள், ஏரிகளில் நீராடி, குளக்கரை விநாயகரை வழிபட்ட பின்னரே தத்தம் கடமைகளைத் தொடங்குவர்; மிகவும் நெருக்கமான, சோலைகள் அடர்ந்த இடங்களில் குளங்கள் இருந்துள்ளன; இன்றும் செஞ்சி சாலை மைதானத்தின் எதிரில் சுற்றுச் சுவருடன் கூடிய அருள்மிகு லலாட அம்மன் ஆலயத்தின் அருகில் திருக்குளம் ஒன்று உள்ளதைக் காணலாம். இதேபோலக் கடற்கரையை ஒட்டி உப்பங்கழிகளும் இருந்துள்ளன. அன்றைய உப்பங்கழி என்று கூறப்படும் உப்பனாற்றுக் கால்வாய் இன்று கழிவுநீர் செல்லும் பெரிய வாய்க்காலாகச் செஞ்சி சாலையை ஒட்டி அமைந்துள்ளது.

இந்த உப்பனாற்றின் கீழ்மருங்கில், இன்றைய நேருவீதி சந்திப்பில்தான் (துய்ப்ளேக்ஸ் வீதி) நாட்குறிப்பு வேந்தர், திருவாளர், ஆனந்தரங்கப்பிள்ளையின் பாக்குமண்டி இருந்ததாகக் குறிப்பிடப்படுகின்றது. அக்கட்டடத்தின் பின்பக்கத்தில் இருந்த மணல் நிரம்பிய குளக்கரையில்தான் அருள்மிகு மணற்குள விநாயகரை ஓர் அரச மரத்தின் அடியில் வைத்து வணங்கி வந்தனர் நெசவாளர்கள்; அரசமரத்தடியில் நாகச்சிலையொன்றும் இருந்துள்ளது. இவற்றை நாளும் வழிபட்டுத் தத்தம் வேலைகளைத் தொடர்ந்தனர் நெசவாளர்கள்.

கி.பி.17ம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் புதுச்சேரியில் கிறித்துவர்களும், முகமதியர்களும் சிறுபான்மையான மக்களாக வாழ்ந்து வந்தனர்; கிறித்துவர்களுக்கு மாதா கோவில்கள் மூன்றுக்கு மேல் இருந்தனவென்றும், முகமதியர்களுக்குப் பள்ளிவாசல்கள் மூன்று இருந்தனவென்றும் அறிய முடிகின்றது. **கஸ்தோனே தெஃபோஸ்** என்ற வரலாற்று அறிஞர் புதுவையைப் பற்றிக் கூறும்போது, 'தமிழர்களுக்குப் புதுவையில் முக்கியமான இரண்டு கோவில்கள் இருந்தன. ஒன்று நெசவாளர் தெருவிலும், மற்றொன்று சென்னைப் பட்டணத்து வீதியிலும் இருந்தன' எனக் குறிப்பிட்டுள்ளார். "[When law de lauriston arrived in 1765 to take pos-

session of the place, there was hardly a single house which remained intact and it was difficult to recognize even the outlives of the old town amidst the heaps of wins which lay all around. With the exception of two temples nothing remained to indicate the over flourishing and popular settlement. - Gazettier of India - Union territory of Pondicherry page. 1193). இப்போதிருக்கும் மணக்குள விநாயகர் கோவில் தெருவானது, பிரான்சுவா மர்த்தேன் காலத்திலும், அதற்கு முன்பும் நெசவாளர் வீதி என்றே வழங்கப்பட்டு வந்ததாக வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. ஆகவே குளக்கரையில், அரசமரத்தடியில் அமர்ந்திருந்த மணற்குள விநாயகரை முதன் முதலாகப் பூசித்து வந்தவர்கள் நெசவாளர்களேயாவர்; அவர்களுள், கைக்கோளர் என்ற செங்குந்த முதலியார்களும், சேட செட்டியார் என்று அழைக்கப்பட்ட தேவாங்கச் செட்டிமார்களுமே முற்காலத்தில் நெசவுத் தொழில் செய்தவர்கள் ஆவர்.

பிரஞ்சுக்காரர்கள் புதுவைக்கு இடையே ஓடிய உப்பனாற்றுக் கால்வாய்க்குக் கிழக்கேயுள்ள பகுதியை (Ville Blauche) வெள்ளை நகரம் என்றும், உப்பனாற்றுக் கால்வாய்க்கு மேற்கேயிருந்த பகுதியைக் (Ville Noire) கறுப்பர் நகரம் என்றும் பாகுபடுத்தியிருந்தனர். கிழக்குப் பகுதியிலிருந்த தமிழர், தெலுங்கர், இசுலாமியர் யாவரையும் விரட்டியடித்து விட்டுத் தமக்குரிய பெரிய மாளிகைகள் அமைத்துக் கொண்டனர் பிரஞ்சுக்காரர்கள். அங்குப் பெரும்பான்மையாக வாழ்ந்த 'கைக்கோளர்' என்னும் செங்குந்த முதலியார்கள் தமக்குரிய நெடுந்தெருவொன்றை நகரத்தில் ஏற்படுத்திக் கொண்டனர். செங்குந்தர் தெரு என்பது கைக்கோளர் தெருவென்றே நீண்ட காலம் வழங்கி வந்தது; அதன்பின், அத்தெருவைக் 'கலவை சுப்புராய செட்டித் தெரு' என்று வழங்கினர்.

பழைய நெசவாளர் தெருவில் வாழ்ந்து வந்த சேடச் செட்டியார்கள் சிலர் ஊருக்கு வடக்கே முத்தியாலுப்பேட்டைப் பகுதிக்குக் குடியேறித் தம் தொழிலையும் வாணிகத்தையும் தொடர்ந்து நடத்தி வந்தனர்.

### ஸ்ரீ மணக்குள விநாயகர் ஆலய மாட்சியும் தன் பரிபாலன கர்த்தாவும்

இவ்வாலயம் நம் புதுவையில் உள்ளதாக இந்தியாவில் பெரும்பாகத்திலுள்ள மக்களுக்குத் தெரியும். இன்றைக்கும் வெளிநாடுகளிலிருந்து புதுவையைப் பார்க்க வருபவர்கள் இங்குள்ள ஸ்ரீ மணற்குள விநாயகராலயத்தைப் பார்வையிட்டு தன் சரித்திரத்தைக் கேட்பதுடன் பெரிய பாளையத்து ஜலப் பிரபாவத்தையும் கண்டு செல்வது வழக்கமாகும். சில ஆலயங்கள் தேச சரித்திரத்திற்கு

அடிப்படையாயிருப்பதுபோல் இவ்வாலயமும் நம் புதுவைச் சரித்திரத்திற்கும் பூர்வீகச் சின்னமாக அமைந்து விளங்குகின்றது.

இவ்வாலயத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மணற்குள விநாயகமூர்த்தி, புதுவையை என்றும் பாதுகாப்பவராகி ஒவ்வொருவரின் மனத்திலும் எழுந்தருளியிருப்பது பொருத்தமானதாகும். இம்மூர்த்தி, புதுவை ஆரண்யமாயிருந்த போது மணற்குளம் என்று பெயர் வழங்கிய ஒரு குளக்கரையில் பூர்வீகத்தில் எந்த மகரிஷியாலேயோ பிரதிஷ்டை செய்யப் பெற்று, காலாவட்டத்தில் முரட்டாண்டி என்ற பெயருடன் வழங்கப்பெற்ற ஓர் ஆண்டியாரால் பூசிக்கப்பெற்று வந்ததாக ஆன்றோர்கள் கூறக் கேட்டுள்ளோம். அம்மணற்குளம் யாது காரணத்தினாலேயோ தூர்ந்துபட்டு அவ்விடத்தில் நந்தவனம் ஒன்று ஏற்பட்டதாகவும் சொல்லப் பெறுகின்றது. ஸ்ரீ மணற்குள விநாயகரைப் பூசித்து வந்த ஆண்டியார் வசித்து வந்த கிராமம் இன்றும் புதுவைக்கு மேற்கில் ஐந்துகல் தொலைவில் முரட்டாண்டிச்சாவடி என்ற பெயரால் அமைந்திருப்பது ஒரு சான்றாகும்.

புதுவையில் பிள்ளைத் தோட்டத்தில் தங்கியிருந்தகாலை, புதுவைப் பொதுமக்கள் யாவரும் நம் சுவாமிகளைத் தொள்ளைக்காது சுவாமி என்ற பெயரால் அழைத்ததும் உண்டு. இத் தொள்ளைக்காது சுவாமிகள் வெள்ளைக்காரர்கள் அக்காலத்தில் புதுவையில் வசித்துக் கொண்டிருந்த பகுதியில் சமாதி ஆகிவிட்டமையால் புதுவை வாழ் பொதுமக்கள் **'வெள்ளைக்காரர் வீதியில் தொள்ளைக்காதர் அமைந்து விட்டார்'** என்று கூறி வந்தனராம்.

இம்மூர்த்தி அந்நிய மதக்காரர்களாகவும், ஆள்வோர்களாகவும் இருந்த வெள்ளைக்காரர்கள் வசித்து வந்த நகர்ப்பகுதியிலுள்ள ஒரு வீதியில் அசைக்க முடியாத வைரமலையென அன்றுபோல் இன்றும் எழுந்தருளியுள்ளார். அக்காலத்தில் இவரை எத்தனையோ முறை அந்த அந்நியர்கள் தமது அதிகார பலத்தைக்கொண்டு அவ்விடத்தை விட்டுப் பெயர்த்து அகற்றிவிடப் பலவாக முயற்சிகள் செய்தனர். எதுவும் பலிக்காது போனது. அவர்கள் அளவிறந்த கஷ்ட நஷ்டங்களையடைந்து, பின்னர்த் தாம் மேற்கொண்ட காரியம் தவறானதாகும் என உணர்ந்து, மனந்தெளிந்து, தாமும் தொண்டராகி இப்பகவானை வழிபடுபவர்கள் ஆயினராம். இவ்வாலய மூர்த்தியின் மகத்துவங்களைப் பற்றிய பல சரித்திரங்கள் கர்ண பரம்பரையாய்ச் சொல்லக் கேள்விப்பட்டிருக்கின்றோம். இவற்றைக் கொண்டு இவ்வாலயத்தின் பெருமை அறியத்தக்கதென்று அறிஞர்கள் கூறுகின்றார்கள்.

அந்நாள் முதற்கொண்டு விநாயகர் பெருமானைத் தரிசித்து வழிபட்டு வந்த அன்பர்களனைவர்க்கும் எண்ணிய எண்ணங்கள் கைவரப்பெற்றமையால், அம்மூர்த்திக்குக் கோயிலமைத்து அக்குளத்தையும் தூர்த்து, குளத்திற்கு வடபகுதியிலமைந்திருந்த நந்தவனத்தை நன்கு பரிபாலித்து வந்தனர் என்பது ஈண்டு அறியத்தக்கதாகும்.

இங்கு எழுந்தருளியுள்ள ஸ்ரீ எல்லையம்மன் மீது சுமார் 127 வருடங்கட்கு முன்னர், அதாவது கி.பி.1884ல் இரக்தாட்சி வருடம் ஆடி மாதம் 5-ம் தேதி, புதுவை **உபாத்தியாயர் சுப்புராமசாமி** முதலியாரவர்கள் **எல்லையம்மன் பதம்** என்னும் ஒரு நூல் இயற்றியுள்ளார்கள். அந்நூலில் **ஸ்ரீ மணற்குள விநாயகர் மீது காப்புச் செய்யுள்** ஒன்றை இயற்றியமைத்துள்ளார்கள்.

'பன்னுஞ் செமதக்னி பாரிஎல்லை நாயகிமேல்
மன்னும் பதத்தை வழுத்தநெஞ்சே - யின்னற்
பிணக்ககற்றி நல்லருள்செய் டார் புதுவை
மணக்குளவி நாயகனை வாழ்த்து'

**ஆலயத்தின் சிறப்பு :**

1968ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 8-ம் தேதி இக்கோயிலுக்குத் தேவஸ்தான நிர்வாகக் குழுவின் தலைவராயிருந்த உயர்திரு. அட்வகேட் **ராமச்சந்திர ரெட்டியார்** அவர்களால் **ஸ்படிக லிங்கம்** கொடுக்கப்பெற்றது. அது அவருடைய சொந்தச் செலவில் உயர்திரு லெப்டினன்ட் கவர்னர் பி.டி. ஜாட்டி அவர்கள் முன்னிலையில் ஸ்தாபிதம் செய்யப்பட்டது. அன்று முதல் தினந்தோறும் காலை 10.00 மணிக்கு அந்த லிங்கத்திற்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்று வருகின்றன.

ஸ்ரீ மணற்குள விநாயகர் ஆலயத்தின் தென்புறச் சுற்றுப்பிரகாரம் சிறியதாக இருந்தமையாலும், உற்சவ காலங்களில் சுவாமியும், பொதுமக்களும் வலம் வருவதற்குப் போதுமான வசதி இல்லாத காரணத்தினாலும் புதுவைப் பிரமுகர்கள் பலர் அவ்விடத்தை வடபுறத்தில் உள்ளதுபோல் விரிவுபடுத்த எண்ணிப் புதுவை ஸ்ரீ அரவிந்த ஆசிரமத்திற்குச் சொந்தமான இடத்தைப் பெறுவதற்காகப் பலகாலம் முயற்சி செய்தும், பெற முடியாதிருந்த இடத்தை **ஸ்ரீ அரவிந்த ஆசிரமத்தின் அன்னையார்** அவர்கள் தாமே மனம் உவந்து **1968ஆம் ஆண்டு டிசம்பர் 25ஆம் தேதி** மேற்படி 10,610 பரப்பளவுடைய சதுரடி இடத்தை நன்கொடையாக அளித்தார்கள். இன்றும் அதற்கான சான்றைக்

காணமுடிகின்றது. இச்செய்தியைக் கோவிலுக்கு வருவோர் தெரிந்துகொள்ள முடியும். பிறகு பல பிரமுகர்கள் உதவியால் மண்டபம் கட்டப்பெற்று, விநாயகர், சுப்பிரமணியர் சந்நிதிகளும் புதியனவாக அமைக்கப் பெற்றுள்ளன. உட்பிரகாரத் தென்புறச் சுவரில் கணபதியின் சோடச உருவங்களும், விநாயகர் பெருமானின் ஏனைய தோற்ற உருவங்களும், வடபுறச் சுவரில் முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகளின் விளக்க உருவங்களும் அமைக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீ விநாயகப் பெருமானுக்குப் பள்ளி அறையும் அமைக்கப் பெற்றுள்ளது. உற்சவமூர்த்திகள் பளிங்குக் கற்களும், கண்ணாடிகளும் பதிக்கப்பெற்ற சுவர்களைக் கொண்ட தனி அமைப்பில் ஸ்தாபிதம் செய்யப்பட்டுள்ளனர். அங்குள்ள விமானங்கள் பித்தளைத் தகடுகளால் சித்திரிக்கப்பட்டு அருள் நிறைந்து காணப்படுகின்றன.

இராஜகோபுரமுள்ள வீதியில் ஒரு மண்டபம் அமைய வேண்டுமென ஆலய அர்ச்சகர் உயர்திரு. **உ.நா. மணி குருக்கள்** எண்ணி விநாயகப் பெருமானின் அருட்துணைகொண்டு முயற்சித்தார். பல அருளாளர்களின் ஒத்துழைப்பின் வாயிலாகப் புதுவை நகர மன்றத் தலைவர் திரு. **E. குபேர்,** அப்போது இங்குத் துணை ஆளுநராக இருந்த மேதகு **பி.டி. ஜாட்டி** ஆகியோர்களின் பரிபூரண ஒப்புதல் பெற்று முன்மண்டபத் திருப்பணிக்குழுவை அமைத்துப் பக்தகோடிகளிடம் நிதி திரட்டி, முன்மண்டபத்தை வெகு அழகாக முறையோடு கட்டி முடித்தார்கள். 6-1-75ஆம் தேதி திங்கட்கிழமை மாலை 6.00 மணிக்கு இந்தியத் துணைக்கண்டத்தின் துணைக் குடியரசுத்தலைவர் உயர்திரு பி.டி. ஜாட்டி அவர்களின் முன்னிலையில் முன்மண்டபத் திறப்பு விழா வெகு சிறப்பாக நடைபெற்றது. பக்தர்கள் கூட்டம் திரள் திரளாக வந்து விநாயகப் பெருமானின் அருட்பிரசாதம் பெற்றுச் சென்ற காட்சி மிக நேர்த்தியாகக் காணப்பட்டது. ஆலய நிர்வாகக் குழு அருள் நோக்கோடு இன்றும் செயல்படுவது கண்கூடு.

இந்தியத் துணைக்கண்டத்தில் புதுவை ஸ்ரீ மணற்குள விநாயகர் ஆலயம் (விநாயகப் பெருமானுக் கென்று தனி ஆலயம்) சகல மைப்புகளுடன் விளங்குவது **புதுவை நகருக்கே ஒரு தனிச்சிறப்பு.**

**புதுவை மக்களும் மணற்குள விநாயகரும் :**

**கி.பி.** 1880-ஆம் ஆண்டையொட்டிய காலங்களில் **பு.அ. பெரியசாமிப் பிள்ளையும், ச. மாணிக்கப் பிள்ளையும்,**

**ஸ்ரீ இரத்தினப் பிள்ளையும்** முதன் முதலில் ஸ்ரீ மணற்குள விநாயகரைப் பாடிய பின்னரே பிற நூல்களைப் பாடுவர் என்று வரலாற்றாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

**ஸ்ரீலஸ்ரீ நாகலிங்க சுவாமிகள்** மணக்குள விநாயகர் மீது காப்புச் செய்யுள் பாடியுள்ளார். இவரே **மணக்குள விநாயகர் பஞ்சரத்தினம்** பாடியுள்ளார். இப் பஞ்சரத்தினப் பாடலுக்கு வி. புதூர் திரு. **கி. வேங்கடசாமி ரெட்டியார்** அவர்கள் குறிப்புரை எழுதியுள்ளார்.

கி.பி. 1895இல் **ஸ்ரீ சாமி பொன்னுப்பிள்ளை** அவர்கள் ஸ்ரீ மணற்குள **விநாயகர் மீது பதிகம்** ஒன்றைப் பாடியுள்ளார்கள்.

கி.பி.1918ல், **பண்டிதர் சுப்புராயப் பத்தர்** அவர்கள் மணற்குள **விநாயகர் பதிகம்** என்பதைப் பாடியுள்ளார்.

கி.பி.1936ல் **யாழ்ப்பாணம் தென்கோவை ச. கந்தையாப் பிள்ளை** அவர்கள் புதுவை ஸ்ரீ மணற்குள விநாயகப் பெருமான் மீது பாடல்கள் பாடியுள்ளார்.

**புதுவை கு. சோமசுந்தரம் பிள்ளை** அவர்கள் விநாயகர் மீது **பதிக நூல்** ஒன்று பாடியுள்ளார்.

**சு. கந்தசாமி உபாத்தியாயர், கோ. இராமாநுஜ செட்டியார், சி. பங்காரு பத்தர், நா. வேங்கடாசல நாயகர், ஆ. வரதப்பிள்ளை** ஆகியோரும் மேலும் பல புலவர்களும் விநாயகரைப் போற்றிப் பல பாடல்களைப் பாடியுள்ளனர்.

**ஆனந்தரங்கர் நாட்குறிப்பில் மணற்குள விநாயகர்:**

மணற்குளம் இருந்ததற்கான சான்றுகளுள் மிக முக்கியமானவை புதுவை ஆனந்தரங்கப் பிள்ளையவர்கள் எழுதி வைத்துள்ள நாட்குறிப்புகளே ஆகும். 250 வருடங்களுக்கு முன்னர் எழுதப்பெற்ற இக்குறிப்புகளில் அவர் மணற்குளத்தைப் பற்றியும் மணற்குள விநாயகரைப் பற்றியும் பல இடங்களிலே குறித்துச் செல்கிறார். அவர் தம்குறிப்புச் சுவடியில் ஐந்தாம் பகுதி 17ஆம் பக்கத்தில் கூறுவதாவது:

"கி.பி. 1748இல் ஏப்ரல் மாதம் 7ஆம் தேதி பிரபவ ஆண்டு பங்குனி மாதம் 29ஆம் தேதி ஞாயிறு

இற்றைநாள் ராத்திரி ஒன்பது மணிக்குள்ளே எட்டரை மணிக்குச் சாவடி மணியம் முருகப்பிள்ளை வந்து நான் இருக்கிற பாக்குக் கிடங்கிலே **மணற்குளத்து பிள்ளையார்கோயில்** அண்டையிலே இருக்கிற கதவண்டையிலே வந்து என்னை அழைத்து இரண்டு மூன்று நாளாய் ஊரிலே நடக்கிற சேதி நீங்கள் கேட்டுயிருக்கிறீர்களோ என்னமோ தெரியாது என்று கேட்டார். அதற்கு நான் ஒன்றும் அறியேன். நடந்த சேதி என்னவென்று கேட்டேன்".

ஆனந்தரங்கப்பிள்ளை அவர்களின் இன்னொரு குறிப்பிலும் மணற்குள விநாயகர் ஆலயம் பேசப்படுகிறது. மேற்சொன்ன நாட்குறிப்பு 5ஆம் பகுதி 365ஆம் பக்கத்தில் காணப்படுவதாவது:

"1748-ம் ஆண்டு க்டோபர் மாதம் 2ஆம் தேதி விபவ ஆண்டு புரட்டாசி மாதம் 20ஆம் தேதி புதன்கிழமையும்........

இற்றை நாள் நம்முடையவர்கள் வெளியிலே இரண்டு இடத்திலே புதிதாய்க் கொத்தளமெழுப்பி தன்பேரிலே பீரங்கியை வைத்துப் போட்டதும் சுற்றுக்கோட்டைக் கொத்தளங்கள் பேரிலே வாடிக்கையாய் போடுகிறபடிக்கு பீரங்கிகளும், மொடுத்யோ வைத்து தீக்குடுக்கை போட்டதுமாய் ஐந்நூறு அறுநூறு குண்டுகள் தன் மேலேயல்லாமல் தாழ்த்தியில்லை. மீர்குலா முசேன் வீட்டு வாசற்படியிலே ஒரு தீக்குடுக்கை விழுந்தது. துரை வீட்டுக் குசினியிலே (சமையற்கட்டு) ஒன்று விழுந்தது. சம்பா கோவிலிலேயும், தோட்டத்திலேயும் நாலு ரெண்டு விழுந்தது. புகையிலைக் கிடங்கு அண்டைக்கும் நம்முடைய வெள்ளாழத் தெரு குதிரை - லாயத்தண்டை ஒன்று. நம்முடைய பாக்குக் கிடங்குக்குப் பிறகே **மணக்குளத்தங்கரை பிள்ளையார்கிட்டே** இருக்கிற சட்டைக்காரச்சி வீட்டிலே விழுந்தது".

ஆனந்தரங்கப்பிள்ளையின் நாட்குறிப்பிலிருந்து, புதுச்சேரியில் மணற்குளம் இருந்ததையும், அதன் கரையில் பிள்ளையார் கோயில் இருந்ததையும் தெளிவாக உணரமுடிகின்றது; இங்கு மணற்குளம் இருந்த பழைய அடையாளமாக, விநாயகரின் கருவறையில், பீடத்தின் அக்னி மூலையென்னும் தென்கிழக்கு மூலையில் ஒரு சிறிய பள்ளம் அமைத்துப் பழைய குளக்கரையின் பெருமை மாறாமல் காத்து வருகின்றனர்; அந்தப் பீடத்தின் மேல் தகட்டைத் தூக்கினால், ஒரு சிறிய பள்ளம் காணப்படும்; அதனுள் கைவிட்டு மணலை எடுத்துக் காட்டி உண்மையை மறைக்காமல் வெளி உலகத்திற்கு தெரிவிக்கும் பாங்கு, போற்றக் கூடியதே! விநாயகரின் பெருமையை உணர்ந்த மக்கள், தொடக்க காலத்தில், ஏறக்குறைய ஐந்நூறு

ஆண்டுகளுக்கு முன்னால், மணற்குளத்தங்கரையில் விநாயகரை வைத்துச் சிலைக்குமேல் ஒரு கூரை அமைத்து வழிபட்டு வந்தனர். பிறகு விநாயகப் பெருமானுக்குக் கருவறை அமைத்து, அதனுள்ளே விநாயகப் பெருமானை நிலை நிறுத்தி வழிபட்டு வந்தனர்; அக்காலத்தில், கோவில் கருவறை, முன் அர்த்த மண்டபம் மட்டுமே இருந்தன, கோவிலைச் சுற்றித் தோட்டம், நந்தவனம் அமைத்து, மதிற்சுவர் எழுப்பி, வெளிக்கதவும் அமைத்திருந்தனர்; கிராமக் கோவில்களில் மரச்சட்டங்களால் சந்து விட்டு அமைத்துச் சந்து வழியாக உள்ளேயிருக்கும் இறைவனைக் காணும் முறையில் அமைக்கப்பட்டிருப்பது போல மணற்குள விநாயகர் கோயில் தெருக்கதவும் இருந்துள்ளது. இதனைச் செய்தவர்கள் கைக்கோளர் எனப்படும் செங்குந்த மரபினரும், சேடர் எனப்படும் தேவாங்க மரபினரும் ஆவர் என்பது திண்ணம்.

## விழா நடத்தத் தடைகளும் - இன்னல்களும்

அன்றைய சேசு அடியார்கள், தங்களின் ஈஸ்டர் காலத்தில் நடைபெறும் விழாவின்போதும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் பிள்ளையார் சுவாமி திருவீதி உற்சவம் நடைபெறக் கூடாதென்று கூறினர். அன்றைய ஆளுநர் 1701இல் அதற்கான கட்டளையைப் பிறப்பித்துள்ளார்; அது மட்டுமல்லாது, மணற்குள விநாயகர் கோவிலை இடிப்பதற்கும், சிலைகளை உடைப்பதற்கும் முயன்றுள்ளனர்; மக்கள் ஒன்றுபட்டு எதிர்ப்பைக் காட்டினர். தொழில் முடக்கம் நடைபெற்றது. முடிவில் ஏறக்குறைய 15,000 பேர் ஒன்று கூடி ஊரை விட்டு வெளியேறுவதற்கும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

அன்றைய **ஆளுநர் பிரான்சுவா மர்த்தேன்** போலீஸ் அதிகாரிகளுடன் குதிரை மீதமர்ந்து, சென்னைப்பட்டணத்து வாயிலுக்குச் சென்று, எல்லாரையும் தொழில் செய்து முடிப்பதற்காக ஊரை விட்டு வெளியில் செல்லக் கூடாதெனத் தடுத்துள்ளார்; கும்பெனி வேலைகளுக்கு இடையூறு உண்டாகும் என்பதை நன்கு உணர்ந்தார்; நெசவு நெய்வோர், அச்சுக் குத்துவோர், கட்டுப் போடுவோர், கொல்லற்றுக்காரர்கள், கப்பல் துறைமுகத் தொழிலாளர்கள் ஆகியோர் இல்லாவிட்டால், கப்பல் ஏற்றுமதி இறக்குமதி நடைபெற இயலாது; பெருத்த இழப்பு ஏற்படும். இதன் விளைவாகப் பாதிரிமார்கள், கிறித்துவ சமயப் பெரியோர்கள், பிரபுக்கள் ஆகியோரைக் கோட்டைக்கு வரச் சொல்லிக் கலந்தாலோசனை செய்யப்பட்டது. பின்னர், அன்று மாலையில் கோட்டையில் நடைபெறும் கூட்டத்திற்கு எல்லாரும் வரவேண்டும் என்று அழைத்தார்.

மக்கள் கவர்னரின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு, மாலையில் கோட்டைக்குச் சென்றனர்; மணிக்கணக்காய் ஆலோசனை நடைபெற்றது. அதன்படி, கோவிலில் பழையபடியே அபிடேக ஆராதனைகள் செய்யலாம் என்றும், சுவாமி புறப்பாடு நடைபெறலாம் என்றும் ஒத்துக் கொள்ளப்பட்டுக் கோவில் பராமரிப்புப் பணிகள் நடைபெறத் தொடங்கின. ஆனால், ஒவ்வோராண்டும் திருவிழாக்கள் நடத்துவதற்கும், சுவாமி புறப்பாட்டிற்கும், வாண வெடிகள் ஏற்பாடு செய்வதற்கும் அரசாங்கத்தாரிடம் உத்தரவு பெற வேண்டும் என்று ஆணை பிறப்பிக்கப்பட்டது. ஆனால், மூன்றாண்டுகளுக்குப் பிறகு திருவிழா நடத்துவதற்கு உத்தரவு மறுக்கப்பட்டது. மக்கள் மதச் சுதந்திரம் இன்றி அல்லல்பட்டனர்; அல்லலுக்கிடையே ஊரையே காலி செய்து விட்டுப் போகவும் தீர்மானிக்கப்பட்டது.

அடுத்ததாக, கி.பி.1705இல் நெசவாளர்கள் இக்கோயிலில் ஆண்டு விழா நடத்துவதற்கு அரசவையில் உத்தரவு கேட்டனர்; உத்தரவு மறுக்கப்பட்டது.

கி.பி.1706இல் நெசவாளர்கள் தாங்கள் கொண்டாடி வந்த விழாக்களை நடத்தக் கூடாதென்று கவர்னர் ஆணையிட்டதை நீக்கிப் பழையபடியே விழாக் கொண்டாட உத்தரவு அளிக்க வேண்டும் என்று மன்னர் ஆலோசனைச் சபையைக் கேட்டுக் கொண்டுள்ளனர். பிறகு, விழாக் கொண்டாடலாம் என்று உத்தரவு தரப்பட்டுள்ளது. மறுநாளே நெசவாளர்கள் ஒரு குளத்தில் மணற்குளத்துப் பிள்ளையாரை மஞ்சள் நீராட்டியுள்ளனர் (திருமஞ்சனம்) - **புதுவையும் மணக்குள விநாயகர் கோயிலும்** என்ற தன் நூலில் **வே. சிவமதி சேகர்** இச்செய்தியைக் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு மூன்று ஆண்டுகள் மதச்சுதந்திரமின்றி வாழ்ந்தனர்; மதச் சுதந்திரமின்றி வாழ்தலைக் காட்டிலும் ஊரை விட்டுச் செல்வதே மேல் என்று மீண்டும் முடிவு செய்தனர். இம்முடிவு கவர்னருக்குத் தெரிவிக்கப்பட்டது. கவர்னர் அமைதியைக் காக்கும் நோக்கத்துடன் விழா நடத்த உத்தரவளித்தார். மறுநாள் பிள்ளையாரை மணற்குளத்திற்கு எடுத்துச் சென்று திருமஞ்சனம் செய்வித்தனர் (**அருள்மிகு ஸ்ரீ மணக்குள விநாயகர் வரலாறும் - மகிமையும்** - பக்கம் 15)

இவற்றிலிருந்து, அக்காலத்திலேயே விநாயகரின் உற்சவர் சிலை செய்யப்பட்டிருந்து, அச்சிலை மணற்குளத்தங்கரைக்கு எடுத்துச் செல்லப்பட்டுத் திருமஞ்சனம் செய்விக்கப்பட்டதையும், உற்சவங்கள்,

விழாக்கள், தெருவீதி வலம் வருதல் ஆகியவை நடைபெற்றதையும் அறிகின்றோம்.

அன்றிருந்த தாழ்த்தப்பட்ட வகுப்பினரில் சிலர், கிறித்தவர்கள், சேசு அடியார்கள் கோவிலுக்குள்ளே சென்று, அங்கு எரிந்து கொண்டிருந்த தூண்டா விளக்குகளை வீழ்த்திப் பட்டுத் திரைச்சீலைகளைக் கிழித்துச் செப்புச் சிலைகளை உடைத்துப் போட்டனர். கலக்கமுற்ற மக்கள் கோவிலைச் சுற்றிலும் இரவு முழுவதும் விழித்திருந்து காவல் காத்து வந்தனர். கோட்டைக்கு யாரும் வேலைக்குப் போகவில்லை. போராட்டம் தீவிரமாகத் தொடர்ந்தது. சந்தை வியாபாரம் முடங்கியது; கவர்னர் மக்களைச் சந்திக்க வேண்டும் என்று **ஆனந்தரங்கப்பிள்ளை** கேட்டுக் கொண்டார்.

அதன்படி, மக்கள் கவர்னரிடம், 'டச்சுக்காரர்கள் காலத்தில் நடந்தது போல், எங்கள் மதக் கொள்கைகளைக் கடைப்பிடிக்க உரிமை வேண்டும்' என்று ஒரே குரலாகக் கேட்டனர். மிகப்பலவாக ஆலோசனை நடைபெற்றது. (டச்சுக்காரர்கள் புதுச்சேரியைக் கி.பி.1693ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் 1699ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் வரை ஆட்சி புரிந்தனர்)

**வெள்ளிக்கிழமை வழிபாடு:**

இதற்குள்ளாகக் கூட்டத்திற்கு மூவகைப்பிரிவுப் பாதிரிமார்களும் வந்தனர்; சுப்புய்சேன் பாதிரியார்களும், அந்நிய நாட்டுப் போதனைத் துறவியரும் மதச்சுதந்திரத்திற்கு ஒப்புக் கொண்டனர். சேசு அடியார் பிரிவினர் மட்டும் ஒப்புக் கொள்ளவில்லை. ஆதலால், தமிழர்கள் வெள்ளிக்கிழமைகளில் எவ்விதமான மேளதாள வாத்தியங்களும் இசைக்கக்கூடாது என்றும், கொம்பும் தமுக்கும் தேவதாசிகளின் நடனங்களும் இல்லாமல் பெரிய கோவிலுக்கும் (சம்பாக்கோவில் - ஆதிவேதபுரீசுவரர் கோவில்), நெசவாளர் தெருக்கோவிலுக்கும் (அருள்மிகு மணற்குள விநாயகர் கோவில்), பெரிய கடைக் கோவிலுக்கும் (கடைத்தெருவில் உள்ள இன்றைய நெல்லுமண்டி விநாயகர் கோவில்) இக்கோவில் விநாயகர் மாசி மகப் புறப்பாடு செல்லலாம் என்று பிரஞ்சுச் சட்டம் வகுக்கப்பட்டது. அதாவது, இந்த விநாயகர் பந்தலிலிருந்து புறப்பட்ட பின்னரே ஏனைய கடவுள் சிலைகள் புறப்பட்டுச் செல்லலாம் என்றும், வழக்கம்போலத் திருவிழாக்கள் நடத்தலாம் என்றும் உத்தரவு அளிக்கப்பட்டது. இதனால் ஊர் அமைதி அடைந்தது.

## விநாயகர் நடத்திய விந்தை

கோவில் பணிகள் தொடர ஆரம்பித்தன. இக்காலக் கட்டத்தில்தான், ஒரு பிரஞ்சுக்காரன் கோவில் விநாயகர் படிமத்தை எடுத்துக் கடலில் எறிந்து விட்டானென்றும், மறுநாள் அப்படிமம் முன்பு இருந்த இடத்திலேயே இருக்கக் கண்டனர் என்றும், இதேபோல ஓரிரு முறை நடக்கவே, அதிகாரிகளும், பாதிரிகளும், சேசு அடியார்களும் கண்டு வியந்து, பயந்து கோவிலில் வெள்ளிக்கிழமை வழிபாடு செய்து கொள்ளவும், உற்சவங்கள் நடத்திக் கொள்ளவும் உத்தரவு வழங்கினர் என்றும் பெரியோர்கள் வழிவழியாகச் சொல்கின்றனர்.

வரலாற்றின் அடிப்படையில் மணற்குள விநாயகர் கோவில் தெருவில் வாழ்ந்தவர்கள் நெசவாளர்கள் என்பதும், அந்தத் தெருவிற்கு நெசவாளர் தெரு (Rue de Tisserands - French) என்று பெயர் வழங்கி வந்ததும் உண்மை! புதுச்சேரி ஆளுநர்க்கு உதவியாகப் பிரஞ்சு அதிகாரி **'ஓர்லையான்'** (Orlean) என்பவன் நியமிக்கப்பட்டான்; அவன் சேசு அடியார்களின் ஆதரவு பெற்றவன்; அவன் காலத்தில்தான் மணற்குள விநாயகர் படிமம் கடலில் எறியப்பட்டதும், மறுநாள் அதே இடத்தில் காணப்பட்டதுமான நிகழ்வுகள் நடந்துள்ளன. அவனுடைய அதிகாரத்திற்குட்பட்ட நெசவாளர் தெரு (Rue de Tisserands) என்ற பெயர் 'ஓர்லையான் வீதி' (Rue d'Orlean) எனப் பெயர்மாற்றம் செய்யப்பட்டது. நெசவாளர்களை அடியோடு இடமாற்றம் செய்தவன் 'ஓர்லையான்' என்பவனே! - அன்று தங்கள் இருப்பிடத்தை மாற்றிக் கொள்ளாத நெசவாளர்களுக்கு (சேடர் செட்டிமார்களுக்கு) வீடு கட்டிக் கொள்ளச் 'சவானா' (Savana Mill) ஆலைக்குப் பக்கத்தில், (இன்றைய சுதேசி பஞ்சாலைக்கு மேற்குப் பகுதியில்) இடமளித்தவன் அவனே! அதனால்தான் அப்பகுதிக்கு 'ஓர்லையன்பேட்டை' (Orleanpet) எனப் பெயர் வழங்கி வருவதை அறிய முடிகின்றது. ஓர்லையன்பேட்டையில் புகழ்பெற்ற கைத்தறி நெசவாளர்கள் இருந்தனர். கிடங்குகளும் இருந்தன. அவர்கள், துணிகளைப் பினாங்கு, மலேயா, சிலோன், இந்தோசீனா போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வர்த்தகம் செய்து வந்ததையும் உலகு அறியும்!

## வெள்ளைப் பிள்ளையார்

கோவில் இருந்த இடத்தில் முன்மண்டபம் போன்றவை கட்டிக் கொள்ளப் பிரஞ்சு அரசினர் அனுமதி வழங்கினர்; கோவிலை இடிப்பதற்குக் காரணமானவர்களே பிற்காலத்தில் கோவில் மேலோங்குவதற்கும் துணை

புரிந்துள்ளனர். இதனாலேயே சில ஆண்டுகள் முன்பு வரையில், மணற்குள விநாயகர் கோவிலை, **'வெள்ளைப் பிள்ளையார் கோவில்'** என்றே மக்கள் வழங்கி வந்தனர். அதாவது, வெள்ளைக்காரர்களே வணங்கி வழிபட்ட பிள்ளையார் என்பது ஐயந்திரிபற்ற உண்மையாம். இன்றும், புதுச்சேரி மக்கள் மட்டுமன்றி, இந்தியரும், அயல்நாட்டாரும், அந்நிய மொழி பேசுவோரும், இன, மொழி, சாதி, சமய வேறுபாடின்றி யாவரும் அருள்மிகு மணற்குள விநாயகர் கோவிலுக்கு வந்து வழிபட்டுப் பேரானந்தம் அடைகின்றனர்.

குறிப்பாகத் 'துய்ப்ளேக்ஸ்' கவர்னராக இருந்த காலத்தில் மணற்குள விநாயகர் கோவில் எந்தத் தாக்குதலுக்கும் உட்படாமலிருந்தது என்பது உண்மைச் செய்தி.

**ஆனந்தரங்கப்பிள்ளை** அவர்கள், **'மணற்குளத்தங்கரைப் பிள்ளையார்'** என்று சிறப்பாகக் குறிப்பிடுகின்றார். இவ்விநாயகர் டச்சுக்காரர்கள், போர்ச்சுகீசியர்கள், டேனிஷ்காரர்கள், ஆங்கிலேயர்கள், பிரஞ்சுக்காரர்கள் ஆகியோரின் ஆட்சி முறைகளைக் கண்டவர்; புதுவையில் நடைபெற்ற நான்கு முற்றுகைகளையும், போர்க் குமுறல்களையும் பார்த்துப் புன்சிரிப்புடன் யாவர்க்கும் கருணை மழை பொழியும் வித்தகராவார். சித்தத்தினுள்ளே சிவலிங்கமாய், சத்தத்தினுள்ளே சதாசிவமாய், அணுவிற்கணுவாய், அப்பாலுக்கப்பாலாய் உள்ளவர் என்று துதிக்கப்பட்ட இந்த விநாயகப் பெருமான், வேண்டியார்க்கு வேண்டியாங்கு வழங்கும் வள்ளலாவார்.

எளிமையாகக் குளக்கரையின் கீழ்க்கரையில் ஓர் அரச மரத்தின் கீழ் வீற்றிருந்த விநாயகர், கூரை வேயப்பட்ட நிழலில் அமர்ந்தார்; கருவறை மண்டபம் ஏற்படுத்திக் கொண்டார்; எந்தப் பிரஞ்சுக்காரர்கள் தன்னை எடுத்துப் போய்க் கடலில் எறிந்தாரோ, எவர் தன் கருவறையில் எரிந்து கொண்டிருந்த தூண்டா விளக்கினை உடைத்துப் போட்டாரோ, எவர் திருவிழாக்கள் நடைபெறுவதைத் தடுத்தாரோ, அதே பிரஞ்சுக்காரர்களைக் கொண்டே தன் கோவில் முன்மண்டபம் அமைத்துக் கொண்டார்; நாளும் சுடர்விட ஒளிவிளக்கு ஏற்றிக் கொண்டார்; மக்களின் அன்பின் காரணமாகத் தெருவீதியுலா உற்சவங்கள் நடைபெற வழிவகுத்துக் கொண்டார். எல்லாவற்றினும் சிறப்பாக, உயர்வாக, அதே பிரஞ்சுக்காரர்கள் தம்மை வழிபட்டுய்யுமாறு விந்தை புரிந்து எழிலோடு விளங்குகின்றார்!

'அழுதால் வினையேன் அழுக்கலும்
தொழுதால் சிறியேன் சிறப்புமிகும்

எழுதா ஒலியாம் பிரணவத்தைப்
பொழுதும் நினைத்தால் புண்ணியமே!'

**தொள்ளைக்காது சித்தர் சுவாமிகள்:**

அக்காலத்தே தான், தொள்ளைக்காது சுவாமிகள் என்று போற்றப்படுகின்ற முரட்டாண்டிச் சித்தர் நம் புதுவையை நாடி வந்தார். இவரின் இயற்பெயர் யாருக்கும் தெரியாது; ஆனால் சற்றே முரட்டுக் குணம் (பிடிவாதம்) உடையவராக விளங்கியவர். நெடிய உயரம், ஒல்லியான உடல்வாகுடன் எதன்மீதும் பற்றற்ற நிலையில், எதனையும் ஒரு பொருட்டாகக் கொள்ளாத நிலையில் வாழ்ந்தவர்; இவர் தென்தமிழ்நாட்டுப் பகுதியிலிருந்து வந்திருக்கலாம் என்பது யூகமே! காரணம், தமிழகத்தின் தென்கோடிப் பகுதியில் வாழ்வோர், தத்தம் காதுகளில் பெரிய குண்டலங்கள் அணிவர், அதன் காரணமாகக் காதுகளின் துளை பெரியதாகி, நீண்டு, தொங்கிருப்பதை இன்றைய நாட்களிலும் காண இயலும்! காதுகளின் துளை பெரிதானால் ஆன்மீகச் சிந்தனை அதிகரிக்கும் என்பது சிலரின் நம்பிக்கை என்பர்.

'சித்தன்போக்கு சிவம்போக்கு' என்ற முதுமொழிக்கிணங்கத் தன் ஊர், தன் உறவு யாவற்றையும் நீங்கி, மாமுனிவர்கள் கூடுகின்ற **புண்ணிய பூமியாம் புதுச்சேரி** மண்ணுக்கு ஆண்டியாய் அவர் வந்தார். இன்றைய புதுச்சேரி எல்லைக்கு மேற்கே ஐந்து கல் தொலைவில் காணப்பட்ட மேடான ஓரிடத்தில் தனித்து வாழத் தலைப்பட்டார்; வெள்ளைக்காரப் பிள்ளையாரின் விந்தைமிகு செயல்களைக் கேள்விப்பட்டு, அவரைக் கண்டு வணங்கிப் பேறுபெற வந்தவர், அவரையே நாளும் வழிபடுபவராக மாறியதும் வியப்பேயாம்!

ஏழைகள் வாழ்ந்த குடிசைப்பகுதியில் தாமும் ஒரு குடிசையில் வாழ்ந்தவர் சுவாமிகள்; அவரின் பற்றற்ற போக்கால் ஆண்டி என்றும், பிடிவாத முரட்டுக் குணத்தால் 'முரட்டாண்டி' என்றும் வழங்கப்பட்டார்; ஆயினும், அவரின் தனித்த செயல்களைக் கண்ட மக்கள் நாளும் நாளும் அவரைச் சூழ்ந்து வரலாயினர்; அத்துடன் ஒவ்வொரு நாளும் அதிகாலையில் எழுந்து, அருள்தரும் பிள்ளையாரை வணங்கிவரும் வழக்கத்தைக் கடைப்பிடித்ததால், மக்கள் அவரைச் 'சாமி' என்று அழைக்கலானார்கள். அவருடன் ஒருசிலர் தங்கியிருந்ததும் உண்டு; தன்னுடைய குடிலின் முன்னால் வழிப்போக்கர்களுக்குக் குடிதண்ணீர்ப் பானை வைத்து நற்காரியம் செய்தார்.

'முரட்டாண்டி' தங்கியிருந்த பகுதியானது முதலில் புதுச்சேரிக்கு வெளியூர்களிலிருந்து வண்டிகளில் வரும் சந்தைப் பொருள்களைக் கணக்குப் பார்த்து, அவற்றிற்குரிய வரிப்பணம் வாங்கிச் சீட்டுக் கொடுக்கும் இடமாக இருந்தது; கணக்குகள் பற்று வைத்துச் சீட்டு வழங்கிய இடங்கள் புதுச்சேரியில் 'சாவடி' என்று அழைக்கப்பட்டன. (உ-ம்) பிள்ளைச்சாவடி, முதலியார்சாவடி, தட்டான்சாவடி, ரெட்டிச்சாவடி.... போன்றவை) காலப்போக்கில் அது 'முரட்டாண்டிச் சாவடி' என அழைக்கப்பட்டது. சுவாமிகளிடம் தம் குறைகளைக் கூறி ஆறுதல் பெறச் செல்லும் மக்களின் கூட்டம் பெருகத்தொடங்கியது. புதுவையில் ஆளுநராக (கவர்னர்) இருந்த **துய்ப்ளேக்ஸ்** அவர்களும் முரட்டாண்டிச் சாவடிக்குச் சென்று சுவாமிகளைக் கண்டு வந்துள்ளார் என்பதைத் **திரு. ஆனந்தரங்கப்பிள்ளை** அவர்களின் சொஸ்தலிகிதக் குறிப்பைக் கொண்டு நாம் அறியலாம்.

"1743" நொவம்பர் µ 10$^{2}$க்கு ருத்ரோத்காரி அற்பசி µ 28$^{2}$ ஆதிவாரம் நாள்! காலமே ஐந்து மணிக்கு (அ) துரையவர்கள் முகே துய்ப்ளேக்ஸ் அவர்கள் மொறட்டாண்டி தண்ணீர் பந்தலுக்கு விளையாடத் தக்கதாகப் பயணம் புறப்பட்டுப் போனார்கள்.

நொவம்பர் µ 24$^{2}$க்கு கார்த்திகை µ 12$^{2}$ ஆதிவாரம் நாள்! காலமே ஏழு மணிக்கு (அ) துரையவர்கள் மொறட்டாண்டி தண்ணீர்ப் பந்தலிலேயிருந்து இவ்விடத்துக்கு வந்து கொடி சுருக்கிப் போட்டு..... மணிக்கு மறுபடியும் (அ) துரையவர்கள் புறப்பட்டு மொறட்டாண்டி தண்ணீர்ப் பந்தலுக்குப் போய்விட்டார்கள்.

1743 டிசம்பர் µ 19$^{2}$க்கு ருத்ரோத்காரி மார்கழி µ 8$^{2}$ வியாழக்கிழமை நாள் சாயுங்காலம் நாலு மணிக்கு (அ) துரையவர்கள் மொறட்டாண்டி தண்ணீர்ப் பந்தலிலேயிலிருந்து இவ்விடத்துக்கு வந்துவிட்டார்கள். வரும்போது அவ்விடத்திலே முசே துளோ ராமுக்கும், முசே தீப்பிர்ழனே அவர்களுக்கும் ஒருத்தருக்கொருத்தர் சாராயத்தைக் குடித்ததன் பேரிலே விசேஷ வார்த்தை நடந்து முசே துலோராம், முசே தீப்பிர்ழனேயை உதைத்தார்.....

இக்குறிப்புகளிலிருந்து தண்ணீர்ப் பந்தல் இருந்ததற்கான அடையாளங்களை அறிய முடிகின்றது.

சுவாமிகள் தண்ணீர்ப்பந்தல் அமைத்து மக்களுக்கு உதவியதால் அப்பகுதியிலிருந்து மக்கள் அவரிடம் மிகுந்த பக்தியும் மரியாதையும் கொண்டிருந்தார்கள். அவ்வூரை **'மொறட்டாண்டிச் சாவடி'** என்றே

அழைத்து வந்தனர். இதனை நேரில் கண்டு மனம் பொறாத துய்ப்ளேக்ஸ் அவர்கள் செய்த செயலை ஆனந்தரங்கப்பிள்ளை வாயிலாக அறிவோம் (நாட்குறிப்பு - முதல்பாகம் - பக்கம் - 187)

'1743 டிசம்பர் µ 21<sup>2</sup>க்கு ருத்ரோத்காரி மார்கழி µ 10<sup>2</sup> சனிவாரம் நாள். காலமே (அ) துரையவர்கள் சொன்னதென்னவென்றால் இன்று முதலாய் **மொறட்டாண்டி தண்ணீர்ப் பந்தலிலே** வர்த்தகர், பெரிய மனுஷர், கும்பனி உத்தியோகஸ்தர் சகலமான பேருமாய்ப் பேருக்கொரு வீடு கட்டிக் கொள்ளச் சொல்லியும் இனிமேலாக அதைத் **'துய்ப்ளேக்ஸ் பேட்டை'** என்று சகலரும் சொல்லுகிறதேயல்லாமல் மொறட்டாண்டி தண்ணீர்ப்பந்தல் என்ற யாதாமொருத்தர் சொல்லுகிறார்களோ அவர்கள் கையிலே அபராதம் வாங்கிப் போகுவோருமென்கிறதாய் உத்தாரங்கட்டளையிட்டார்கள்'.

அப்பகுதியில் வசித்த மக்கள், முரட்டாண்டிச் சாவடி என்ற பெயரை மாற்றித் 'துய்ப்ளேக்ஸ் பேட்டை' என்று அழைக்க மனமில்லாது வேறு இடங்களுக்குச் சென்றுவிட்டனர்; பிரஞ்சு அரசினரின் கெடுபிடிகளும் அதிகரித்தன.

மக்கள் வேறிடம் நோக்கிச் செல்வதைக் காணப்பொறாத சுவாமிகள், புதுவைக்கருகாமையில் உள்ள ஆனந்தரங்கர் தோட்டத்தின் ஒரு பகுதியில் (ஆனந்தரங்கர் வேண்டுகோளின்படி) சிறு குடிசை ஒன்று அமைத்துக் கொண்டு சில காலம் அங்குத் தங்கியிருந்தார். புதுவைக்கருகில் சுவாமிகள் தங்கியிருந்ததை அறிந்த மக்கள் அவரைக் காண வந்தார்கள்; பின்னர் அப்பகுதிக்குச் **'சித்தன் குடிசை'** என்று பெயர் உண்டாயிற்று. இன்று **'சித்தன் குடில்'** என்று வழங்கப்படுகிறது.

சித்தன் குடிசையிலிருந்து சுவாமிகள் மணற்குளத்தங்கரைப் பிள்ளையாரை வழிபடுவதோடு நகரத்தில் உள்ள அருள்மிகு முத்துமாரியம்மன் கோவிலுக்கும் சென்று வழிபாடாற்றினார். பழக்கத்தால் முரட்டாண்டிச் சுவாமிகளே நம் விநாயகர்க்குப் பூசை புரிபவராகவும் தொண்டு புரிந்தனர். சுவாமிகள் தம் சாயுச்சிய (இறைவனடி சார்தல்) நிலையை அடைவதற்கான நாளை அறிந்து வைத்திருந்ததால், மணற்குளத்தங்கரைக்கு அண்மையில் வசித்து வந்த குடிமக்களை அழைப்பித்துத் தம் உயிர் நீங்கிய பின்னர், தம்மை மணற்குளத்தங்கரையில் சமாதி செய்ய வேண்டும் என்று தம் விருப்பத்தைத் தெரிவித்திருந்தார். அதன்படியே மணற்குளத்தங்கரைப் பகுதியில் வசித்து வந்த குடிமக்கள், சுவாமிகள் சாயுச்சிய நிலை அடைந்த பின்னர், அவர்க்குச் செய்ய வேண்டிய

கிரியைகள் யாவற்றையும் முறையாகச் செய்தனர்; மணற்குளத்தங்கரையின் மேற்கில் சமாதி வைக்கப்பட்டார் என்று கூறப்படுகின்றது; ஆனால், பல ஆண்டுகளாக மக்களால் வழிபட்டு வந்த சமாதி இருந்த இடம் தற்போது எதுவென்று அறிய இயலவில்லை! ஆனால், சுவாமிகளை மணற்குளத்தங்கரையில் சமாதி செய்து விட்டபடியால், 'வெள்ளைக்காரர் வீதியில் தொள்ளைக் காதர் அமைந்துவிட்டார்' என்று மக்கள் எதுகை மோனையுடன் கூறி வியப்பினைப் பறைசாற்றினர். அந்தப் புதுமொழி மட்டும் உலகத்திற்கு அரிதான ஓர் உண்மையை உணர்த்துகின்றது.

பிரஞ்சு நாட்டு வெள்ளைக்காரர்களின் அனுமதியுடன், அவர்களின் நேரடிப் பார்வையில் சுவாமிகள் அடக்கம் செய்யப்பட்டார்; ஆதலால், முன்னினும் மிகுதியாகப் பேராவலாக எங்கெங்கோ இருந்த சுற்றுப்புற மக்களும் அருள்மிகு மணற்குள விநாயகரை வழிபட முனைந்து வந்தனர்; தங்கள் வீட்டு நற்காரியங்கள், குழந்தைப் பேறு, நலவாழ்வு, வணிக முயற்சி, வணிக வளர்ச்சி, புதியனவாக வாங்கப்படும் பொருட்கள், வாகனங்களின் பயணம் என அனைத்துச் செயல்களையும் நம் அருள்மிகு மணற்குள விநாயகரை வழிபட்ட பிறகே தொடங்கினர்; வெளியூர்களிருந்தும் இன்றளவும் மக்கள் நற்காரியங்கள் தொடங்கிட விநாயகரை வழிபட்டுச் செல்வதை நாம் நேரிலேயே காணலாம். தங்கள் குடும்பத்தில் குழந்தைகள் பிறந்தால், கோவிலுக்குத் தூக்கி வந்து, விநாயகர்க்குப் பிடித்த மோதகம், கடலை.... மற்றவற்றைப் படைத்துக் குழந்தையை விநாயகர் சன்னதியில் படுக்க வைப்பர். பின்னர் வீட்டிற்கு விநாயகர் அருள் பெற்றவர்களாகச் செல்வது இன்றளவும் யாவருடைய குடும்பங்களிலும் நிகழ்கின்ற மாற்ற இயலாத ஒரு சடங்காகவே விளங்குகின்றது!

**மூல விநாயகர்:**

மணற்குளத்தங்கரையில் அரசமரத்தடியில் வழிபட்ட விநாயகரை மக்கள் கருவறையில் வைத்து வணங்கி வந்தனர். அந்த விநாயகரின் வடிவம் தொன்மைக் காலச் சிற்பக்கலை நுணுக்கத்தோடு விளங்குகின்றது; அதாவது மெலிந்த உடல்வாகுடன் தன் இரண்டு கால்களையும் மடக்கிச் சப்பணமாக அமர்ந்த கோலத்தில் காணப்படுகின்றார். அந்த விநாயகப் படிமத்தைத் தான் பிரஞ்சுக்காரன் தூக்கிச் சென்று இரண்டு மூன்று முறை கடலில் போட்டான்; விநாயகரும் மறுநாள் காலையில் கருவறையில் இருந்து அன்பர்களுக்கு அருள்வழங்கி நல்லாசி புரிந்து வந்தார். ஏறக்குறைய, தொள்ளைக்காது சுவாமிகள் மறைவுக்குப் பிறகு, கோவிலில் சில சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஆகம முறை வழிபாடுகள் நடைபெறத் தொடங்கின.

அந்தக் காலத்தே, ஆகம நெறிக்குட்பட்ட தன்மையாக ஒன்றுக்கு மூன்றுமுறை வெள்ளைக்காரன் கைபட்ட பிள்ளையார் சிலை தீட்டுப்பட்டது என்று கருதப்பட்டது; ஆகவே, வழிபாட்டிற்கு ஊறு நேராவண்ணம், புதியதாக இப்போது கருவறையில் மூலவிநாயகராகக் காட்சியளிக்கக்கூடிய புதிய விநாயகர் சிலையைக் கருவறையில் (ஸ்தாபிதம்) வைத்து, அதற்குரிய சடங்குகள் செய்யப்பட்டு, வழிபாட்டிற்குரிய வகையில் மாற்றியமைத்தார்கள். அதே வேளையில் பழைய, முன்னர் வழிபட்டுவந்த விநாயகர் சிலையை இப்போது மூலவராக எழுந்தருளியிருக்கும் விநாயகரின் இடதுகைப் பக்கம் வைத்துள்ளனர். மூல விநாயகரை மாற்றியமைத்தது ஏறக்குறைய 1930ஆம் ஆண்டு நடைபெற்ற (கும்பாபிஷேகத்திற்கு) குட முழுக்கிற்கு முன்னர் நடந்திருக்க வேண்டும்.

தற்போதும், கோவிலின் கருவறையில் மூல விநாயகருக்கு வலது பக்கம் 'நாகபந்தச்சிலை'யையும், இடதுபக்கம் மூத்த முதல்வனாகிய பழைய விநாயகர் சிலையையும் காணலாம். இன்றளவும் இப்படிமங்களுக்குப் அபிடேக ஆராதனைகள் தவறாமல் நடந்து வருகின்றன.

## ஸ்ரீ மணக்குள விநாயகரைக் கண்டு வணங்கிய சான்றோர்கள் :

**பாரதியார், வ.வே.சு. அய்யர்** போன்றோர் இவ்விநாயகரை வணங்கித் தொழுதவர்களில் சிலர். பாரதியார் **'விநாயகர் நான்மணிமாலை'** பாடியுள்ளார். இப்பாடல் வரிகள் மணக்குள விநாயகர் கோவிலின் சுவரில் பொறிக்கப்பட்டுள்ளன.

## கொடிமரம் வைத்தமை :

விநாயகர் கோயிலில் கொடிமரம் (துவஜஸ்தம்பம்) வைக்க வேண்டும் என்று சிலர் எண்ணினர். வேறு சிலர் வைக்கக்கூடாது என்றனர்.

மரவாடி நடேச குப்புசாமி பிள்ளை அவர்களால் தேக்கு மர கொடிமரம் (துவஜஸ்தம்பம்) 1955-ஆம் ஆண்டு நிறுவியது. அதன்பிறகு 1957ம் ஆண்டு வடநாட்டைச் சேர்ந்த ஒருவர் தங்க முலாம் பூசிய தகடு போர்த்தினார்.

**திருமுடி ந. சேதுராமனார்** இல்லத்திற்கு மணி குருக்கள் அவர்களும், மற்றவரும் வந்து இதுபற்றிக் கேட்டனர். அப்போது திருமுடியார் திருவாளர் N.R. பட் அவர்களை நோக்கி ஆகமத்தில் இது தொடர்பாக ஏதாவது இருக்கிறதா? என்ற கேள்வியைக் கேட்டார்; திருமுடியாரே பதிலும் கூறினார்.

'துவஜஸ்தம்பம் வைத்தால் ஆண்டுப் பெருவிழா (பிரம்மோற்சவம்) செய்தல் வேண்டும்' என்பது அவர் பதில். அவ்வாறே கொடிமரம் வைக்கப்பெற்று 30-08-1957இல் தகடு வேய்ந்தனர். அன்றிலிருந்து வெகு சிறப்பாக ஆண்டுப் பெருவிழா நடைபெறுகிறது.

மேலும் நடேச குப்புசாமி பிள்ளை 1909-ம் ஆண்டு, முதல் சித்திரை திங்கள் விடியற்கால முதல் அபிடேக ஆராதனையை செய்து வந்தார். அவருக்கு பின் அவருடைய வாரிசுதாரர் **நடேச. கு. அர்த்தநாதன் பிள்ளை** அவர்கள் தொடர்ந்து செய்து வருகிறார்.

**குடமுழுக்கு (கும்பாபிஷேக) விபரம்:**

இத்தகைய பெரும்புகழ் படைத்துள்ள மணற்குள விநாயகர் ஆலயத்தில் சரியானதோர் உற்சவமூர்த்தி இல்லாதிருந்தது. அக்குறை நிவர்த்திக்கப்படத் **திரு. கருணாநிதி கந்தசாமி பிள்ளை மருகர் மோரிஸ் கணபதியாப் பிள்ளை** அவர்களால் திருப்பணிக்கான முயற்சி செய்யப்பட்டது.

1. பிரமோதூத ஆண்டு வைகாசி மாதம் 24ம் தேதி வெள்ளிக்கிழமை 06-06-1930 சுபதினம் காலை 6.30 மணிக்குள் ரிஷப லக்கினத்தில் புதுவைப் பெருமக்களின் ஒத்துழைப்பாலும், ஸ்ரீ மணற்குள விநாயகரின் திருவருளாலும், நிர்வாகக் குழுவினர் சு. கந்தசாமி பிள்ளை, திருமுடி நடராஜ செட்டியார், முத்து நடேசப்பிள்ளை, போல் ஜெயராம நாராயணதாஸ், முத்து கோவிந்தராசு பிள்ளை ஆகியோரின் காலத்தில் மகா கும்பாபிஷேகம் சிறப்பாக நடந்துள்ளது.

2. புதுவை ஸ்ரீ மணக்குள விநாயகர் ஆலயத்தில் புதியதாக உற்சவமூர்த்தி ஒன்று அமைக்க வேண்டும் என்றனர் பொதுமக்கள். அறநெறியாளர், படம், குடை வியாபாரம் உயர்திரு. ரா.மா.கோவிந்தசாமி பிள்ளை தம் சொந்தப் பொறுப்பில் புதியதாக ஓர் உற்சவமூர்த்தி அமைத்து, அதற்கான பூஜைக்கு வேண்டிய நிதியையும் ஏற்படுத்தினார். மன்மத ஆண்டு தைத் திங்கள் 21ஆம் நாள் (03-02-1956) சுக்ரவாரம் சப்தமி திதி சுவாதி நட்சத்திரம், சித்தயோகம் கூடிய சுபதினம் காலை 7.00 மணிக்குமேல் 8.30 மணிக்குள் கும்ப லக்கினத்தில் கோவில் நிர்வாகக் குழுவைச் சார்ந்த டாக்டர் சுகுமாறன், திரு.போல் ஜெயராம் நாராயணதாஸ், சந்தானம் பிரஸ் திரு. டி, சின்னசாமி முதலியார், திரு. வி.கே. பழனிசாமி முதலியார், திரு. முத்து நடேச பிள்ளை போன்றாரின் காலத்தில் பொதுமக்கள் ஆதரவுடன் சிறப்பாக மகா கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது.

3. உயர்திரு. அ. சேனாபதி முதலியார் அவர்களின் தலைமையில் ஐம்பத்திரண்டு பேர்கொண்ட குழு உருவாக்கப்பட்டது. கோவில் நிர்வாகக் குழுவினர் திரு. கி. லோக நாதய்யர், திரு. போல் ஜெயராம நாராயணதாஸ், திரு. வி.கே. பழனிசாமி முதலியார், திரு. ந. அண்ணாமலை பிள்ளை, திரு. ரா.மா. கோவிந்தசாமி பிள்ளை, தேவஸ்தான அர்ச்சகர் திரு.உ.நா. மணி குருக்கள் சேர்ந்து சைவ ஆகமப்படி, நவகுண்டம் அமைத்துப் பத்துநாள் அங்க பூஜை நடந்தது. பிறகு காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சாரியஸ்வாமிகள் முன்னிலையில் பராபவ ஆண்டு சித்திரைத் திங்கள் 14-ஆம் நாள் **(27-04-1966)** புதன்கிழமை சப்தமி திதி புனர்பூச நட்சத்திரம் சித்தயோகம் கூடிய சுபதினத்தில் பொதுமக்கள் கடலெனத் திரண்டு இருக்கக் காலை 9.00 மணிக்குமேல் 10.30 மணிக்குள் மிதுன லக்கினத்தில் மகா கும்பாபிஷேகத்தைச் சிறப்பாக நடத்தினார்கள்.

4. அனைவராலும் துதிக்கப்பெறும் விநாயகருக்கு **'உற்சவமூர்த்தி'** புதிதாக உருவாக்கப் பெற்றுக் குரோதன ஆண்டு பங்குனித் திங்கள் ஏழாம் நாள் **20-03-1986** குரு வாரம் புனர்பூச நட்சத்திரத்தில் ஜடிபந்தன மகா கும்பாபிஷேகம் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மேலும் மணக்குளநாதர் திருவீதியுலா வருவதற்கு 1989ஆம் புதுவை நாடு ஷண்முக வேலாயுத முதலியார் கொள்ளுப் பெயரான சபாபதி கந்தப்ப முதலியாரால் தங்கத்தேர் ஒன்று (மரத்தினால் செய்யப்பட்டுத் தங்கரேக் ஒட்டியது) மணக்குள விநாயகர் கோயிலுக்கு நன்கொடையாக அளிக்கப்பட்டது. 100 ஆண்டுகள் பழமை வாய்ந்தது இந்தத் தங்கத்தேர் என்கின்றனர். ஒவ்வொரு ஆண்டிலும் **தமிழ் கார்த்திகை** மாதத் **திருவாதிரை நட்சத்திரத்தில்** இத்தங்கத்தேர்த் திருவீதியுலா நடைபெற்று வருகின்றது.

5. இஃதேயன்றிச் சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன் ரூபாய் இருபது இலட்சம் செலவில் ஒன்பதடி உயரத்தில் வெள்ளித்தேர் ஒன்று அறங்காவற் குழுவினரால் செய்யப்பட்டுள்ளது. திருமண மண்டபம் ஒன்றும் **21-04-1980** அன்று உருவாகியது. அது புதுவை வி.கே. பழனிசாமி முதலியார், வி.கே. இராஜமாணிக்க முதலியார், வி.கே. துரைசாமி முதலியார் ஆகியோரின் நன்கொடையால் அமைந்தது. மணக்குள விநாயகர் கோயில் திருப்பணி 1994ஆம் ஆண்டு தொடங்கப்பெற்று நான்கு ஆண்டுகளுக்குப்பின் முடிவுற்றது. இறையன்பர்களின் பொருளுதவியால் திருமண மண்டபம் மேலும் விரிவடைந்தது. பெரிய அளவில் கட்டப்பட்டு 1994ஆம் ஆண்டு திறந்து

